# 38. மணிக்கூண்டு

மனிதன் எதை எதையெல்லாமோ தப்புவதற்கு என்னத்தை யெல்லாமோ செய்கிறான். எதையாவது அவனால் தப்பிவிட முடிகிறதா?

தனிமை தாளுவதில்லை ஒரு மனிதனுக்கு. அதற்காக அவன் பிற மனிதர்களைத் தேடிக்கொண்டு போகிறான். மனசில் எதையோ ரகசியமாக வைத்துக்கொள்ள வேண்டும் என்று எண்ணிக் கொண்டு, சுற்றி வளைத்துப் பேசுகிறான். 'எனக்கு எங்கே போனாலும் சிநேகிதர்கள்தான்' என்கிறான். ஒரு வயதுக்குப் பிறகு தனிமை தாளாத குற்றத்தினால் தான் காதல் செய்யவும், அவளைத் தேடி (அதாவது யாரோ ஒரு அவளைத் தேடி) அடையவும் முயலுகிறார்கள் வாலிபர்கள். வாழ்க்கையில் பங்கெடுத்துக் கொள்வதற்காகத் தெரிந்து தேடிக் கொள்வதில்லை. ரகசியத்தில் அவளைப் பங்கெடுத்துக் கொள்ளச் சுலபத்தில் செய்துவிட முடிகிறதா? அதுவும் இல்லை. முதல் ஐந்து வருஷங்களுக்கு அவள் இவனுடைய ரகசியத்தில் பங்கெடுத்துக் கொள்ளக் கூடியவர்கள் அன்று. அதற்குப் பிறகும் இருவருக்கிடையே புது ரகசியங்கள் தோன்றிவிடுகின்றன. இவனுக்குத் தெரியாமல் அவளும், அவளுக்குத் தெரியாமல் இவனும் நடைபோடுகிறார்கள். 'வெள்ளைக்காரர்கள் தேவலை ஸார். விவாகரத்து என்று ஒன்று வைத்துக் கொண்டிருக்கிறார்கள். நமக்குத்தான்....'

ஆமாம்; காதல் விவகாரம் விவாகரத்தில் முடிவதில் ஆச்சரிய மில்லை என்று சொல்வது சரிதான். ஆனால் இப்படிச் சொல்கிற வர்களைப் பத்தாம் பசலிக்காரர்கள். பிற்போக்காளர்கள், பழைமை வாதிகள் என்று எதிர்காலத்து வாலிபர்கள் ஒதுக்கி விடுகிறார்கள்! அவர்களுக்கே காதல் தாண்டி விவாகரத்து தேவை வரும்போது?

ஆமாம்; இது பெரிய விஷயம். ஜனநாயக யுகத்தில் மந்திரிகளும், மக்கள் பிரதிநிதிகளும் கூடித் தீர்மானம் செய்ய



வேண்டிய விஷயம். ஆனால், காதல் பண்ணிக் கல்யாணம் செய்துகொண்ட காரணம், ஒரு ரகசியத்தை மறப்பதற்காக இருக்கலாம். ரகசியம் உடன் வருகிறது-காதலிலும் உடன் வருகிறது-விவாகரத்திலும் உடன்வருகிறது.

ரகசியம் என்றும், காதல் என்றும், கல்யாணம் என்றும், விவாகரத்தென்றும் உதாரணத்துக்குத்தான் சொன்னேன். ஒரு மனிதன் தப்ப முயலுவது வேறு ஏதாவதொன்றாகவும் இருக்கலாமே! அப்பாவின் தொல்லை, அம்மாவின் அன்பு, சகோதர சகோதரிகளின் ஒருதலைப் பட்சமான பிரியம், கடவுளின் எல்லாம் அறிந்த பார்வை, சாவு, வாழ்வு எல்லாவற்றையுமே அந்தந்த அளவில் அந்தந்தச் சந்தர்ப்பத்தில் தப்ப முயல்பவர்கள் உண்டு! வாழ்க்கையைத் தப்ப முயல்பவன் சாமியாராகிறான்; அல்லது தற்கொலை செய்து கொள்கிறான். சாவைத் தப்ப முயல்பவன், புட்டி புட்டியாக மருந்தை வாங்கி வைத்துக்கொண்டு, 'சாவே வா! நான் அஞ்சேன்!' என்று கவிதை பாடுகிறான். அவன் செய்கிற தப்பு ஒன்றுதான். அந்தக் குப்பி மருந்துகளைச் சாவுக்குக் கொடுத்தானானால், சாவு, டாக்டர்கள் புண்ணியத்தில் செத்துவிடும். ஆனால், அவன் சாப்பிட்டுவிட்டு மடிகிறான்.

ஒன்றும் செய்யாமல், சும்மா இருப்பதுவே சுகம் என்று இருந்துவிட்டால், பொழுது போகாது என்றுதான் நான் நினைக்கிறேன். ஆனால், சும்மா இருந்துவிட்டுக் கடிகாரத்தைப் பார்த்தால், அரைமணியாகிவிட்டது தெரியும். கடிகாரம் ஏமாற்றுகிறது என்று சொல்லிவிடலாம். வேண்டுமானால் பொழுது போகாதிருப்பதாகக் கடிகாரத்தையே நிறுத்திப் பார்த்துவிடலாம்.

## 2

நாகராஜன்பட்டினத்திலே மணிக்கூண்டுக் கடிகாரம் ஓடிக் கொண்டுதான் இருந்தது.

சும்மாதான் போனேன். எனக்கென்ன, வேலையா வெட்டியா? பேச்சளவிலே பார்த்திருக்கிறேன் என்று சொல்லிக் கொள்வதுடன் திருப்தியடைந்துவிடலாம், பல இடங்களிலும் இருந்து பார்த்துவிட வேண்டும் என்கிற ஆசையுள்ளவன் நான். தங்குவதற்காக வசதியாக இடம் கிடைத்தது. மணிக்கூண்டு எதிர்க்கட்டிடம், இரண்டாவது மாடியிலே முன் அறை.

நான் என் அறைக்குள் போனபோது, பக்கத்து அறையிலே குசுகுசுவென்று சப்தம் கேட்டது. நிதானித்துக் கேட்டேன். "அப்பவே சொன்னேனே, கேட்டியா? இப்போ பக்கத்து ரூம்லே வேற்று மனுஷன் வந்துட்டான்?" என்றது ஆண் குரல்.

பெண் குரல்-குரலிலிருந்து வயதை நிர்ணயிக்கலாம் என்ற கொள்கையுடையவன் நான். இதுபோன்ற என் கொள்கைகள் பல சமயங்களில் பலித்ததில்லை என்றாலும், கொள்கையை விடாதவன்! இந்தக் குரலிலிருந்து பெண்ணுக்கு இருபது வயதிருக்கும் என்று என் அனுமானம். மெலிந்த உடலுடன் இருப்பாள் என்றும் அனுமானித்தேன். பெண் குரல் சொல்லிற்று.

"அவரு இருந்தாக்க அவரு ரூமிலே சும்மா இருக்காரு? நமக்கென்ன வந்தது?" என்று.

விவாகத்திலோ, விவாகரத்திலோ முடியவேண்டிய ஒரு காதல் கல்யாணம் என்று எண்ணிக் கொண்டேன். நல்லதுதான். நாகராஜன் பட்டினத்துக்கு நான் வரும்போது இது நல்ல சகுனம்தான் என்று எண்ணிக்கொண்டேன். எனக்கும் இந்தக் காலத்து மற்ற மனிதர்களைப் போலத்தான்-சகுனத்தில் நம்பிக்கையும் உண்டு; நம்பிக்கையும் கிடையாது. சௌகரியப்பட்ட போது நம்புவேன்; நிச்சயம் உள்ளபோது நம்பமாட்டேன். ஆனால், இந்த மாதிரி விஷயங்கள் கண்ணில் பட்டு, காதில் விழுந்தால் நல்லதா? கெட்டதா? சகுன சாஸ்திரம் என்ன சொல்கிறது என்று எனக்குத் தெரியாது. ஆனால் நல்லதாகத்தான் இருக்கவேண்டும். இல்லா விட்டால் இத்தனை கவிகள், இத்தனை இலக்கியாசிரியர்கள் காதல் பற்றி இவ்வளவு விரிவாக எழுதி வைத்திருப்பார்களா?

மணிக்கூண்டிலே மணி அடித்தது.

"ஆறு மணிக்குத் திரும்பிடணுமே?" என்றது பெண் குரல்.

"உன்னாலதானே தவக்கம்!" என்று ஆண் குரல் முத்தாய்ப்புத் தந்தது.

அதற்கப்புறம் அந்த அறையில் நின்றுகொண்டிருக்க மனசில்லாதவனாக வெளியே வராண்டாவுக்கு வந்தேன்.

தனியாக இருக்கிற மனிதர்கள் ரகசியத்தில் என்ன செய்து கொண்டிருப்பார்கள் என்பதை அனுமானித்தோ கண்ணால் பார்த்தோ, தெரிந்துகொள்ள விரும்பாத மனிதன் யார்? டால்ஸ்டாயும், செக்காவும், தனித்தனியாக இருக்கும்போது என்ன செய்வார்கள் என்று திருட்டுத்தனமாகக் கவனித்து, மார்க்ஸிம் கார்க்கி ஒரு இடத்தில் எழுதியிருக்கிறார். டால்ஸ்டாய் ஓணான் ஒன்று தலையை ஆட்டுவதைப் பார்த்து, அவரும் தலையையாட்டி, 'எனக்கும் துக்கமாகத்தான் இருக்கிறது' என்றாராம். செக்காவ் ஏதோ ஒரு மூலையை வெகுநேரமாக ஆழ்ந்து பார்த்துவிட்டு, 'அடேடே! அங்கே ஒன்றுமேயில்லையே. அது தெரிய எனக்கு இவ்வளவு நேரம் பிடித்ததா!' என்று தன் புத்திக் கூர்மையை வியந்து கொண்டாராம்.



தனியாக மனிதர்கள் இருக்கும்போது நாம் எதிர் பார்க்கிறபடி விஷயங்களைச் செய்யமாட்டார்கள் என்றுதான் எதிர்பார்க்கிறோம். அப்படி எதிர்ப்பார்ப்பதற்கு மாறாகவே அவர்கள் செய்து விட்டாலோ? குரங்குக் கதை ஒன்று சொல்லுவார்களே-குரங்கை ஒரு அறைக்குள் வைத்துப் பூட்டிவிட்டு, அது என்ன செய்கிறது என்று பார்க்கலாம் என்று ஒருவன் கதவிடுக்கில் பார்த்தானாம், குரங்கு சாவித் துவாரத்தின் வழியாக அந்த மனிதன் தனிமையில் என்ன செய்கிறான் என்று பார்த்துக் கொண்டிருந்ததாம்!

நான் ஹோட்டல் வெளி வராண்டாவில் நின்றுகொண்டு கீழே வருவோரையும் போவோரையும் பார்த்துக் கொண்டிருந்தேன். எறும்பின் கண்ணுக்கு மனிதன் ராக்ஷசனாகத் தெரியலாம் - மனிதன் கண்ணுக்கு மனிதனே மனிதனாகத் தோன்றுகிறதில்லை என்பது இந்தக் காலத்தில் உண்மை என்றுதான் சொல்லவேண்டும். அதனால்தானே இத்தனைச் சின்னத்தனங்கள் ஒன்றின்பின் ஒன்றாக விளைகின்றன? கோவிலுக்குப் போய்ச் சுவாமி சந்நிதியில் பெண்களைப் பார்த்துக்கொண்டு நின்றால் என்ன? வேறு வெளியே கடைத்தெரு முனையில் நின்றுகொண்டு பார்த்தால் என்ன? சுவாமி இங்கில்லை என்று சத்தியம் செய்துவிட முடியுமா? கதவிடுக்கில் பார்த்தால் என்ன? மாடி வராண்டாவில் நின்று பார்த்தால் என்ன?

மேலைநாடுகளில் தங்கும் விடுதிகளில் இதற்கென்று அறைக்கு அறை இடுக்குகள் விட்டு வைத்திருந்தார்களாம். நம் ஊரில் நாம் இன்னும் அவ்வளவு நாகரிகமடைந்து விடவில்லை.

மேலும் நாகராஜன்பட்டினத்துக்குச் சாதாரணமாகச் சிகரெட்டும், ஜவுளிகளும் கொண்டு வருகிறவர்கள் தங்கும் போர்டிங்-லாட்ஜிங்தானே அது?

## 3

மாடிப்படியேறிப் பெட்டியையும், படுக்கையையும் தூக்கிக் கொண்டு ஒரு கூலி வந்தான். பின்தொடர்ந்து இந்த ஊருக்கு இந்த இடத்தில் சற்று அநாகரிகமாகக் காணப்பட்ட, நாகரிக உடை அணிந்து, இரண்டு மாடி ஏறிய சிரமம் இரைப்பாக வெளிப்பட, கையில் புகுந்து கொண்டிருந்த சிகரெட்டுடன் வந்தவனை, நான் எங்கேயோ பார்த்திருக்கிறேன். எங்கே என்றுதான் தெரியவில்லை.

ஒரு நிமிஷம் என்னைப் பார்த்ததும் தயங்கினான் பிறகு, "ஸார் என்னைத் தெரிகிறதா?" என்றான்.

இந்தமாதிரிச் சந்தர்ப்பங்களில் நான் தயங்குவதேயில்லை. "தெரியல்லை, பார்த்தமாதிரிதான் இருக்கிறது" என்றேன்.

"மதனகோபால்... அருணாசலத்தோடு தாம்பரத்தில் உங்க வீட்டுக்குக்கூட வந்திருக்கிறேன், ஸார்..." என்றான் மதனகோபால்.

"மதனகோபால்.... மதனகோபால்" என்று இரண்டு தரம் எனக்குள்ளாகவே சொல்லிக் கொண்டேன், பிடிபடவில்லை.

"அருணாசலம் ஞாபகமிருக்கா?" என்றான் மதனகோபால்.

சட்டென்று அருணாசலத்தின் ஞாபகம் வந்தது. மாதவையா வின் பத்மாவதி சரித்திரத்திலே அவுட்டுப் புரட்டுப் பால் ஜோடி சங்கரய்யர் என்று ஒருவர் வருவாரே-அந்த ரகத்தைச் சேர்ந்தவர் அருணாசல முதலியார். அவரை அருணாசலம் என்று சொல்லி எனக்குப் பழக்கமில்லை. முதலியார் என்று சொல்லித்தான் பழக்கம். பரம்பரையாக வந்த சொத்தைக் கொஞ்சம் கொஞ்சமாகக் கரைத்துவிட்டு, முப்பத்தைந்து வயதுக்குள்ளாகத் தெருவிலே நின்ற புத்திர பாக்கியம் அது. எனக்குத் தெரிந்த காலத்திலே தெற்குத் தெருப் பெட்டிக் கடையிலே ஒரு பாக்கெட் சிகரெட் வாங்கிவிட்டு, அதற்குக் கொடுக்கக் காசில்லாமல் வடக்குத் தெரு வழியாகப் போய் வந்து கொண்டிருப்பான். வடக்குத் தெருவிலும் ஒரு பெட்டிக் கடை உண்டு.

"முதலியாரோடு அந்த நாளில் ஒரு சின்னப் பையன் வருவான். மதன், மதன் என்று கூப்பிடுவான்...."



"அந்த மதன்தான் நான்" என்றான், மதனகோபால் கையிலிருந்த ஒன்றரை யங்குலச் சிகரெட் துண்டைக் கீழே பார்த்து விசிறிவிட்டு.

எனக்கு ஞாபகம் இருந்தது. அந்த மதனுக்கு அப்போது வயது பதினாறு இருக்கலாம். நாலாவது பாரத்திலோ, ஐந்தாவது பாரத்திலோ படித்துக் கொண்டிருந்தான். சுட்டியான பையன், சாதாரணமாக அழகாகப் பேசுவான், வாட்டசாட்டமாகவும் அழகாகவும் இருப்பான். சுருள்சுருளாகக் கிராப்பும், பரந்த முகமும் இன்னமும் இருந்தன. எங்கும் போய்விடவில்லை. இருபத்தேழு இருப்பத்தெட்டு வயதிருக்கும் இப்போது. உலக அனுபவ முத்திரைகள் எல்லாம் பெற்று, சமாரோஷணமானவன் போல இருந்தான். அருணாசலத்துக்கு அந்த நாட்களில், காசில்லாத காலத்திலும் அடைக்கலம் என்று நான் கேள்விப்பட்டிருந்தது எனக்கு ஞாபகம் வந்தது.

"உன் அக்கா..." என்று ஆரம்பித்தேன்.

என்ன கேட்பானோ, என்னவோ என்று பயம்போலும் மதனுக்கு. நான் கேள்வியைக் கேட்டு முடிக்கும் வரையில் காத்திராமல், "இந்த ஊரில்தான் இருக்கிறாள் கல்யாணம் செய்து கொண்டு..."

"குழந்தை குட்டிகளுடன் சௌக்கியமாக இருக்கிறாளாக்கும்!" என்றேன் நான்.

## 4

உண்மை என்பது என்ன?

நிஜம் என்று நாம் நம்புகிறவை நிஜமாகி விடுகின்றனவா, நம்மைப் பற்றிய வரையில்? அந்த மட்டுமாவது அவை நிஜமாகி விட்டால், எவ்வளவோ நல்லதுதானே!

மதன் உண்மையைத்தான் சொன்னான் - அசத்தியம் என்று, நான் சொன்னதை எண்ணிக்கொண்டு, என்னை ஏமாற்றுவதாகச் சொல்லவில்லை.

ஆனால், என் அறைக்கு அடுத்த அறைக் கதவைத் திறந்து

கொண்டு அதே சமயம் அந்தப் பெண்குரலின் சொந்தக்காரி வெளியே வந்திருக்க வேண்டுமா?

கதவுச் சத்தம் கேட்டவுடனேயே நான் நிமிர்ந்து பார்த்தேன். என் கொள்கை-குரலிலிருந்து வயதை நிர்ணயிக்கும் கொள்கை - சரிதான் ஆனால், அனுமானம்தான் தவறு. நான் அவளுக்கு இன்னும் இருபது வயது நிறைந்திராது என்றுதான் குரலிலிருந்து தீர்மானித்தேன். ஆனால், இப்போது கதவைத் திறந்துகொண்டு வந்தவளுக்கு வயது முப்பத்திரண்டுக்குக் குறையாது. கட்டுத் தளராத உடல்தான். ஆனால், அவள் யாரென்று நான் நேரில் பார்த்தால்கூடத் தெரிந்து கொண்டிருக்க மாட்டேன்.

அவள் பேசாமல் போயிருக்கலாம். ஆனால், மதனைக் கண்டதும் "நின்று, எப்போ வந்தே தம்பி?" என்றாள்.

முகம் மாறிற்று மதனுக்கு. அந்தச் சமயத்தில் தன் அக்காளைச் சந்தித்தது அவனுக்குப் பிடிக்கவில்லை என்பது தெரிந்தது. "இப்பத்தான்; ராத்திரி வீட்டுக்கு வரேன்" என்றான் மதன்.

"ஏழரை மணிப் பஸ்ஸுக்குத்தான் அவர் வருவாரு. வரட்டுமா?" என்று முகத்தில் ஒரு பொலிவு பளபளக்க, என்னையும் பார்த்துக் கண்களால் ஒரு வெட்டு வெட்டி விட்டுக் கிளம்பிப் படியிறங்கிப் போய்விட்டாள் அவள்.

என்ன தொழிலில், எப்படிப்பட்ட காரியத்தில் ஈடுபட்டவளாகத்தான் இருந்தால் என்ன? கணவன் ஏழரை மணிப் பஸ்ஸுக்கு வந்துவிடுவான் என்கிற ஞாபகத்துடன் வீட்டிலே டிபனும் காபியும் தயார் செய்து வைக்கக் கிளம்புகிற பெண்மணியை, கிருஹிணி, வீட்டுக்கரசி என்று சொல்வது பொருத்தமல்லவா என்று விசாரிப்பதில் ஈடுபட்டிருந்தேன் நான். தவிரவும், உண்மை பகர்வதுபோலச் சொல்லி, அது பொய்யாகி மாட்டிக் கொண்ட மதனகோபாலிடம் பேச்சுக் கொடுக்க எனக்கிஷ்டமில்லை. அவனைக் கஷ்டப்படுத்துவதால் எனக்கென்ன லாபம்? லாபமுண்டானால் கஷ்டப்படுத்தலாம் என்பதுதானே தற்காலப் பண்பு.

இதற்குள் அறையில் அவன் சாமான்களை வைத்துவிட்டு, படுக்கை தட்டிப் போட்டுவிட்டு, "சாமான்களெல்லாம் சரிதானா பார்த்துக்கோ ஐயா!" என்று கூலிக்காரன் வந்தான்.



"நீ சொன்னா சரிதான்" என்று சொல்லிவிட்டு, எட்டணாச் சில்லரையை எடுத்துக் கொடுத்தான் மதனகோபால்.

பிறகு என்னைப் பார்த்து, "அருணாசலம் இறந்து விட்டானே, தெரியுமோ?" என்றான்.

"முதலியாரா? எப்போ செத்தான்? எனக்குத் தெரியாதே! பாவம்!" என்றேன்.

சாவு என்கிற செய்தி யாரையுமே அனுதாபத்துக்குரியவனாக்கி விடுகிறதே, அதேன்? இருந்தபோது அருணாசலத்தை மனிதனாக மதிக்கவே மனசில்லை. நமக்கு மனசிருந்தாலும் அருணாசலம் இடம் தந்திருக்க மாட்டான். ஆனால், இறந்துவிட்டான் என்று கேட்டவுடனே நாம் அனுதாபப்படத் தொடங்கி விடுகிறோம். நாக்குத் தானாகவே பாவம் என்கிறது! மனசு அழுகிறது. ஏன் இது? நாமும் இந்தச் சாவை இப்ப, சத்தியாகத் தள்ளிப்போடலாமே தவிர, தப்பமுடியாது என்பதனாலா? நாமும் லட்சிய புருஷர்களல்ல; நமக்கும் எத்தனையோ குற்றம் குறைகள் உண்டு. யாராவது நாம் மரணமடைந்த செய்தி கேட்டு அனுதாபம் தெரிவிக்கட்டும் என்கிற எண்ணமா நமக்கு? அவர்கள் அனுதாபம் நாம் செத்தபின் நமக்கு எந்த விதத்தில் நன்மையோ, லாபமோ பயக்கக் கூடும்?

நண்பர் ஒருவர் சொல்லிக் கொண்டிருந்த கதை ஞாபகம் வந்தது. ஒரு ஸ்திரீ கட்டுக்கிழத்தியாக இறந்து விட்டாள். இதற்குமுன் அவள் காதிலிருந்த பாம்படங்களைக் கழற்றிவிட முயற்சி செய்யத்தான் செய்தனர். அகற்ற முடியவில்லை. ஆகவே, இறந்தபின் மூக்குத்தியை மாத்திரம் விட்டுவிட்டு, காதுத் தோடுகளைக் காதைக் கத்தரித்து அப்புறப்படுத்திவிட்டார்கள். இந்தச் சந்தர்ப்பத்தில் சாவு வீட்டில் இருந்த ஒரு முதிர்ந்த வயதான பெண்மணி, அதற்குப் பின் தனக்கு உடம்புக்கென்று வந்தால் படுத்துக் கொள்ளுமுன், காதில் உள்ளதையெல்லாம் கழற்றி வைத்து விட்டுத்தான் படுப்பாளாம். இல்லாவிட்டால் செத்தபின் காதை வெட்டி எடுப்பார்களே என்கிற பயம் அவளுக்கு.

வலிக்குமே என்கிற பயமா அவளுக்கு?

வலிக்குமா? அதே போலத்தானே செத்தபின் அனுதாபம்? அது இனிக்குமா?

செத்தவர்களைப் பற்றிக் கெடுதலாக ஒன்றும் சொல்லாதே என்கிறார்களே, அது ஏன்?

## 5

அருணாசல முதலியாருடன் வருகிற ஒரு சின்னப் பையன் என்றுதான் எனக்கு அந்த நாட்களில் மதன கோபாலைப் பற்றித் தெரியும். இத்தனை நாளாக, ஒரு பத்துப் பன்னிரெண்டு வருஷங்களாக, தாம்பரத்தைவிட்டுக் கிளம்பிய நாள் முதலே நான் முதலியாரையும் மதனகோபாலையும் மறந்துதான் போய்விட்டேன்.

நான் மறந்துவிட்டதனால் அவர்கள் எங்கே, போய் விட்டார்களா? எங்காவது போய் விட்டார்களோ? என்னைப் பற்றிய வரையிலுமாவது அவர்கள் இறந்து விட்டவர்கள் மாதிரி தானே? இப்போது மறுபடி ஞாபகம் வந்து, நினைவுபடுத்திக் கொண்டவுடன், உயிர் பெற்று மீண்டும் எழுந்து நடமாடத் தொடங்கி விட்டார்களே! அது எப்படி?

நான்தான் பிரும்மாவா? என் நினைப்பினாலேயே ஆக்கும் சக்தி பெற்றவனா? நான்தான் ருத்திரனா? நினைப்பினாலேயே அழிக்கும் ஆற்றல் பெற்றவனா?

இப்போது மதன் சொல்லுகிறான், அருணாசலம் இறந்து விட்டதாக.

இப்போதுதான் இறந்தானா? எத்தனையோ வருஷங்களுக்கு முன் இறந்தாலும் இன்றுதான் அவன், என்னைப் பற்றிய வரையில் இறந்தான் என்று சொல்லவேண்டும், அல்லவா?

சற்றுமுன்கூட மதன் ஒரு உண்மையைச் சொன்னான். தன் அக்காள்-அவள் பெயர் மீனாச்சி என்று ஞாபகம் வந்தது எனக்கு; பதினோரு நாள் குழந்தைக்கு ஞாபகம் ஊட்டியதுபோல மீனாச்சி யென்று நான்தான் அவளுக்கு இப்போது பெயர் சூட்டினேன் என்று சொல்லாமே - அந்த மீனாட்சி கல்யாணம் செய்து கொண்டு கௌரவமாகக் குடும்பம் நடத்தினாள், குழந்தைகுட்டிகளுடன் என்று சொன்னான் மதன். அதை நிரூபிப்பதற்கென்றே போலத் தங்கும் விடுதியில் என் அறைக்கும், மதன் இன்னும் எட்டிக்கூடப் பார்க்காத அறைக்கும் நடுவிலிருந்த அறைக் கதவைத் திறந்து கொண்டு,



வெளியே வந்தாள் மீனாச்சி. குடும்பஸ்திரீயாகிவிட்டவள் - பிள்ளை குட்டிகளுடன் கௌரவமாகக் குடும்பம் நடத்தியவள் - 'அவர் ஏழு மணிக்கு வந்துவிடுவார்; அதற்குள் காபி, பலகாரம் தயார் செய்து வைக்க வேண்டும்' என்று ஒரு குடும்ப ஸ்திரீயின் கவலையுடன் புறப்பட்டாள், படியிறங்கி.

அருணாசல முதலியாரிடம் சொத்து இருந்த நாட்களில், அவர் சொத்துக்களில் பங்கெடுத்துக் கொள்ளத் தாம்பரத்திலிருந்து திருச்சி வரையில் இருந்த தாசிகள் எல்லாம் தயாராகவே இருந்தனர். முதலியாரும் தருவதற்குத் தயாராகவே இருந்தார். ஆனால், தாசிகள் என்று நான் சொன்னது பிசகு. தாசிகள் என்றால், தேவடியாள் என்று ஒரு குலம் இருந்ததே, அதெல்லாம் ஞாபகம் வரும். உடலை விற்றுப் பொருளாதாரம் தேடிக் கொண்டு, கலையைப் பரிபாலித்து வந்த கோயில் பெண்களை ஞாபகமூட்டும். நாகரிக வாடை ஏற ஏற, நம் ஊரில் அந்தக் குலத்தை முன்னேற்றி விட்டார்களே அதுதான்! இப்போது தாசிகள் யார் என்று சொல்ல முடியாது- அப்படிக் கலந்துவிட்டனர் இந்தக் குலத்தினர் பொது மக்களிடையே. தொழிலால் தாசிகள் மறைந்து விடவே, மனசாலும் வசதிகளாலும் அல்லது வசதிகள் இன்மையாலும் தாசிகள் தோன்றிவிட்டனர் என்பது உண்மைதான்.

முதலியாருடைய சொத்துக் கரைந்து விட்டது. உடலோ, காம உள்ளமோ தளர்ந்தாலும், முழுவதும் கரைந்துவிடவில்லை. பழைய அருணாசலத்தைப் பற்றறுத்துத் தேடிக் கொண்டே அருணகிரி நாதர் போல அருணாசலம் மீனாச்சியிடம் பற்றுக் கொண்டான். மீனாச்சியும் அவனை விட்டுவிடவில்லை.

## 6

எனக்கு மீனாச்சியைப் பற்றித் தெரிந்ததெல்லாம் இதுதான்;

அவள் விவாகமான பெண். புருஷனுடன் நாலுவருஷம் குடித்தனம் பண்ணுவதற்குள், ஒரு குடிசை மட்டும் அவளுக்கு வைத்து விட்டு அவன் இறந்துவிட்டான். வெகு தைரியமாக அவன் ஊரார் பேச்சையெல்லாம் எதிர்த்துக் கண்ணாலம் செய்து கொண்டாள் - தன் ஜாதியிலேதான் கட்டிக் கொண்டாள் - அந்த விதி பிசகவில்லை என்றுதான் மேட்டுத் தெருவார் இந்த நாட்களில்

பெருமைப் பட்டுக் கொண்டிருந்தார்கள். ஆனால், திருமணம் நடந்து இரண்டொரு வருஷங்களுக்கெல்லாம் அவன் சொல்லாமல் கொள்ளாமல் ஓடிப்போய், சண்டையில் சேர்ந்துவிட்டான்.

மதன் என்ற தம்பியுடன் தாம்பரம் வந்து சேர்ந்தாள் மீனாச்சி.

இப்படிப்பட்ட பெண்கள் எங்கு கிடைப்பார்கள் என்று வட்டம் போடத்தான் எல்லா ஊரிலுமே ஒரு கோஷ்டி தயாராக இருக்குமே! தாம்பரத்தில் அந்தக் கோஷ்டி மீனாச்சியை மையமாகக் கொண்டு, சுற்றிவரத் தலைப்பட்டது. மதன் பள்ளிக்கூடத்துக்குப் போய் வந்து கொண்டிருந்தான். வீட்டிலே கற்றுக்கொண்ட பாடங்களில் போலவே அவன் பள்ளியில் கற்ற பாடங்களிலும் துடியாக இருந்தான்.

அருணாசல முதலியாரும் வந்து சேர்ந்து கொள்ளவே, அது ஒரு சாதாரணக் குடும்பம் போலாகிவிட்டது. அருணாசலமும் மதனும் எப்போதும் சேர்ந்தே வருவார்கள். எனக்கு முதலியார் பரிச்சயமானது அந்தக் காலத்தில்தான்.

தேவை ஏற்படுகிறபோது சௌகரியங்களை முன்னிட்டு ஒதுங்கி நிற்க அறிந்திருந்தான், அருணாசலம்.

அதுமட்டுமல்ல, அவள் மனப் போக்குப்படி நடந்து கொண்டான் என்றும் ஊரில் பேசிக்கொண்டது என் காதில் விழுந்ததுண்டு.

இது பற்றி எதுவும் சொல்ல நேர்முகமான அபிப்பிராயம் எனக்குக் கிடையாது.

இன்னொரு சிகரெட்டை எடுத்துப் பற்ற வைத்தான் மதன கோபால். "அருணாசலம் இறந்ததே ஒரு வேடிக்கை", என்றான்.

"அவன் இருந்ததே ஒரு வேடிக்கை தானே!" என்றேன் நான்.

"நீங்கள் சொல்லுவது மிகவும் சரி, ஸார்" என்றான் மதன். "மூன்று நாள் அருணாசலத்தைக் காணவில்லை. எங்கேயோ ஓடிப் போய்விட்டான் என்று நானும் அக்காளும் வருந்தினோம். ஆனால், அக்காள் மட்டும் அவன் அப்படிப் போகக்கூடியவன் அன்று என்று அடிக்கடி சொல்லி வந்தாள். மூன்றாவது நாள் போலீஸ்காரன் எங்களைக் கூட்டிப் போனான்-ஆஸ்பத்திரி சவக்கிடங்கில் உருத் தெரியாமல், ரயிலுக்கடியில் நசுங்கிக் கிடந்த உடல் அருணாசலத் தினுடையதுதான் என்று சொல்லி, வாங்கி வந்தோம். நான் தான் நெருப்பிட்டுக் கொளுத்தினேன்."



"இதையா வேடிக்கை என்கிறாய்?" என்றேன் நான்.

"வேடிக்கை அதில்லை. அக்காள் மட்டும் அது அருணாசல மில்லை. வேறு யாரோ என்று இன்னும் சொல்லுகிறது" என்றான் மதன்.

"அப்டியிருக்கலாமோ?" என்றேன்.

## 7

நாம் ஒருவனைச் செத்துப் போனவனாக நினைத்துக் கொண்டிருந்தால் அவன் உயிருடனிருந்தாலும், உயிருடனிருப் பவனா, செத்துப் போனவனா?

செத்துப் போனான் என்று சொல்லித் தப்பித்துக் கொண்டு வருகிறோம்.

செத்துப் போவது என்றால் என்ன?

யாருக்குத் தெரியும்?

செத்துப் போன பிறகுதான் செத்துப் போவது என்றால் என்ன என்று தெரியும் என்று நம்பியிருக்கிறவர்கள் உண்டு. ஆனால், வாழும்போது வாழ்க்கை என்ன என்பது யாருக்காவது தெரிகிறதோ? வாழ்வுபற்றியே எதுவும் தெரியாதபோது, சாவு என்பது பற்றி மட்டும் தெரிவானேன் - தெரிய வேண்டியது என்ன அவசியம்? வாழ்க்கை என்ன என்று பூரணமாக அறிந்துகொண்டு விட்ட பின்தானே, சாவைப் பற்றிச் சிந்திக்கத் தொடங்கவேண்டும்?

விழித்துக் கொண்டிருப்பவன், உறங்கும்போது எதைப்பற்றி என்று சிந்தனை செய்கிறான்? கனவு காணும்போது எதைப்பற்றி என்ன சிந்தனை செய்கிறான்? கனவு காணும்போது அந்த உலகம், கனவு உலகம் மட்டும்தான் உண்மை என்று தோன்றவில்லையா? கனவு உலகத்திலே மனிதனுக்கு இறக்கைகள் உண்டு; ஒரு இடத்திலிருந்து இன்னொரு இடத்துக்குப் போக வேண்டுமானால்,

மனிதன் நடக்காமல், இடம் பெயர்ந்து அவனிடம் வந்து விடும். விழிப்பு உலகத்தின் ஒரு விநாடி கனவு உலகத்தில் நூறு ஆண்டாகலாம்-விழிப்பு உலகத்தின் ஒரு நூறு ஆண்டு ஒரு விநாடி யாகலாம். விநாடியோ, நூறு ஆண்டோ இல்லாத உலகம் தூக்க உலகம்.

அருணாசலம் இறந்துவிட்டானா இல்லையா? எப்படி, யார் சொல்ல முடியும்?

என் கனவுகளிலே நான் அருணாசலத்தை - அதாவது முதலியாரைப் பார்த்ததுண்டு. முதலியாரின் முகத்தோடு கூடிய ஒரு கழுகின் உருவமாகக் கண்டிருக்கிறேன் ஒரு தரம் ஒரு கழுதையின் உருவமாகவும் கண்டிருக்கிறேன் ஒரு தரம். அது சுவாரசியமான கனவு என்று அந்தக் காலத்திலேயே தோன்றியதுண்டு எனக்கு. அருணாசலத்தின் பழைய ஏட்டை வாசிக்க ஆரம்பித்த சித்திர குப்தன், பக்கம் பக்கமாகப் புரட்டுகிறான். அது ஜீன் கிறிஸ்தோபையும், போரும் அமைதியையும், பழைய கால நினைவுகளையும் விட அதிகமாக நீண்டு கொண்டே போகிறது. சித்திரகுப்தனுக்கு வாசித்துத் தொண்டை வறண்டுவிட்டது. யமனுக்குக் கேட்டுக் கேட்டுக் காது புளித்துவிட்டது. (என் கனவில் தான்) கம்பீரமாக நிமிர்ந்து எழுந்து யமதர்ம ராஜா, "இந்த ஆசாமி யை நம்மால் வைத்துச் சமாளிக்கமுடியாது. அவனை வைகுந்தத்துக்கு அனுப்பிவிடு" என்று சொல்லிவிட்டு, உல்லாசமாக எருமைக் கடாமேல் ஏறிக்கொண்டு, பூலோகத்தை நோக்கி வரக் கிளம்பி விடுகிறான்-பாசக் கயிறும் கையுமாக.

விடியற்காலையில் கண்ட கனவு பலிக்கும் என்றுதானே சொல்கிறார்கள் - அன்று நான் விடியற்காலையில் கனவு கண்டு விழித்துக் கொண்டபோது பக்கத்தில் அன்றைய தினசரிப் பத்திரிகை கிடந்தது. முதல் பக்கத்தில் யாரோ ஒரு பெரிய மனிதர் ஸ்டாலின் என்று ஞாபகம்-இறந்து விட்டதாகச் செய்தி இருந்தது. நான் கண்ட கனவில் கிளம்பிய யமன் எருமைக் கடாவில் ஏறி, பாசக் கயிற்றுடன் மாஸ்கோவுக்குப் போய் ஸ்டாலினை அழைத்து வரத்தான் கிளம்பினானோ! இருக்கலாம். இருக்கமுடியாது என்று யார் சொல்லிவிட முடியும்?

ஆனால், ஸ்டாலினைப் பற்றி நமக்கென்ன கவலை. அருணா சலத்தைப் பற்றியல்லவா சொல்ல வந்தேன். அருணாசலம்



வைகுந்தத்துக்குப் போனானா, எந்தக் காரணத்தைச் சொல்லி, சித்திரகுப்தன் வைகுந்தத்தில் அவனைச் சேர்ப்பித்தான் என்று நான் கனவு காணவில்லை.

இப்போது இது கனவல்ல என்று நான் நம்பியபடியால் நாகராஜன்பட்டினத்தில் மதன் சொன்ன விஷயம் உண்மையாகவும் இருக்கலாம் என்று நம்பினேன் நான். அருணாசலம் இறந்திருக் கலாம். உடல் தெரியாமல் நசுக்கப்பட்டு ரயிலுக்கடியிலிருந்து கிடைத்த உடலை அருணாசலம் என்று ஏற்று, தகனக் கிரியைகள் எல்லாம் செய்ததாகச் சொன்ன மதனைப் பார்த்தேன். அவனுக்கு அதுபற்றிச் சந்தேகம்இல்லை. அருணாசலம் இறந்துதான் போய் விட்டான்.

ஆனால், இறந்தது அருணாசலம் அல்ல என்று அவன் அக்கா மீனாச்சி சொன்னாளாமே! அவளுக்குத் தெரியாதா? அந்த உடலை, மதனைவிட நன்றாக அறிந்தவள் அவள்தானே!

அருணாசலம் உயிருடன் இருந்தானா, இல்லையா?

இருந்தான்!

இல்லவே இல்லை!

## 8

"பாவம்! முதலியார் போனது வருத்தப்படவேண்டிய விஷயம் தான். நல்ல மனிதன்" என்றேன். சாவு எல்லோரையும் தான் நல்ல மனிதர்களாக்கி விடுகிறதே! பலர் இவ்வுலகத்தில் மனிதர்களாவதே செத்த பிறகுதான் என்று சொல்லத் தோன்றுகிறது எனக்கு, ஒரு கோணத்திலிருந்து பார்க்கும்போது.

"நீ என்ன செய்துகொண்டிருக்கிறாய், மதன்?" என்று விசாரித்தேன்.

"ஒரு சோப்புக் கம்பெனியின் வியாபாரப் பிரதிநிதி நான்" என்றான். "பார்த்தாலே தெரியவில்லையா? இந்த உடை, இந்த பாவம், இந்தச் சிகரெட், இந்தப் போர்டிங் லாட்ஜிங் ரூம் எல்லாமாகச் சேர்த்து, நீங்களே ஊகித்திருப்பீர்களே! பெரிய எழுத்தாளராயிற்றே நீங்கள்!" என்று பாதி கேலியாகவும் பாதி

குத்தலாகவும் பதில் அளித்தான் மதன்.

மீனாச்சியிடம் கோபம் அவனுக்கு. இருந்தாலும் அவள் அந்த நேரத்தில், அவன் எதையோ உண்மையென்று நம்பிச் சொல்லி முடித்தவுடன், அப்படி குபுக்கென்று வெளிவந்து, அவனைப் பொய்யனாக்கியிருக்க வேண்டாம்! அது சரிதான். எனினும் அதற்கு அவன் என்னிடம் கோபித்துக் கொண்டு, என்ன லாபம்? நான் என்ன செய்யக்கூடும்?

முதலியாரைப் பற்றிக் கனவுகள் கண்ட நான், மீனாச்சியைப் பற்றி வேண்டுமானாலும் கனவுகள் காணலாம். அவள் ஸதி மீனாச்சியாகிவிட்டாள் என்றும் வேண்டுமானால் கனவுகள் காணலாம்! விழித்துக் கொண்டே கூடக் கனவு காணலாம்.

ஆனால், அந்தச் சிந்தனையைத் தொடராமல், "எந்தச் சோப்புக்குப் பிரதிநிதி நீ?" என்றேன்.

இந்தப் பக்கங்களிலே பெயர் பெற்ற, பிரமாதமாக வியாபாரம் ஆன, ஒரு சோப்பின் பெயரைச் சொன்னான் அவன்.

நாகராஜன்பட்டினம் உண்மையிலேயே அசுத்தமான இடம் தான். அதிலே டன் கணக்காக சோப்பு விற்றாலும் ஆச்சரியப்படு வதற்கில்லை.

"வருஷத்தில் உன் பங்குச் சோப்பு எத்தனை டன் விற்பாய் நீ?" என்று கேட்டேன்.

'விஷயம் தெரிந்துதான் கேட்கிறீர்கள்?' என்று என் அறிவை வியந்து கொண்டான் மதன். அதுதான் சொன்னேனே- அவன் எப்போதுமே துடியான பையன் என்று. "நாங்கள் சில்லறை வியாபாரிகளிடம் விற்கும்போது வில்லைக் கணக்கு, டஜன் கணக்குத்தான். ஆனால், ஆபீஸ் கணக்கில் ரிப்போர்ட்டுடன் கணக்கில்தான் தரவேண்டும். மாதம் என் பிராந்தியத்தில் குறைந்த பட்சம் ஒரு டன் சோப்பாவது விற்பதாக நான் ஒப்பந்தம் எழுதிக் கொடுத்து விட்டு, நாலு வருஷங்களாக வேலை செய்து வருகிறேன்".

"மாதம் ஒரு டன் என்று ஒப்பந்தமா? அப்போது நிச்சயமாக ஒண்ணரை டன்னாவது விற்று விடுவாய்! மாதம் ஒண்ணரை டன் என்றால், வருஷத்தில் பதினெட்டு நாலு வருஷத்தில் 72 டன், பேஷ்! உன் முயற்சிகளினால் நாகராஜன்பட்டினம்..."



"அப்படி ஒன்றும் சுத்தமாகி விடுவதில்லை? கன்னியா குமரியில் போய், மூன்று சமுத்திரங்களும் சேருகிற இடத்தில் இத்தனை சோப்பையும் கரைத்தால், சமுத்திரத்தில் ஒரு மைலுக்காவது சுத்தமாகுமோ, என்னவோ?"

"அப்படியெல்லாம் ஆராய்ச்சி செய்யாதே! மீனவர்கள் மீன் கிடைக்காமல் கஷ்டப்பட்டுப் போய்விடுவார்கள். அல்லது பிடிக்கிற மீன் மலிவான வாசனை அடிக்க ஆரம்பித்து விடுமே" என்றேன்.

"என்னிடம் விலையுயர்ந்த ரகச் சோப்புக்கூட இருக்கிறது ஸார்" என்றான் மதன். "முகத்துக்கு ஒன்று, கழுத்துக்கொன்று, முன் கைக்கு வேறு ஒன்று...."

"போதும்?" என்றேன் நான். "மொத்தத்தில் உனக்கு நல்ல சம்பாத்தியம் என்று சொல்லு."

"பாதகமில்லை. இன்னும் இரண்டொரு வருஷங்களுக்கும் ஓடும்."

"அப்புறம்..."

"போட்டிச் சோப்புக்காரன் விளம்பரம் பிரமாதமாகச் செய்கிறானே, நீங்கள் பார்க்கவில்லையா? அவன் பிடித்து கொள்வான். அவன் பிரதிநிதிக்கு ஒரு நாலைந்து வருஷங்களுக்கு யோகம் அடிக்கும்" என்றான் மதன்.

"காலம் வரும்; காத்திருப்போம் என்று ஜோதி ராமலிங்க சுவாமிகளைப் போல சோப்புக்காரர்களும் காத்திருக்கிற மாதிரிதான் தெரிகிறது" என்றேன் நான்.

"உங்களோடு பேசிக் கொண்டிருப்பதிலே பொழுது போவதே. தெரியவில்லை ஸார்" என்றான் மதன், "அருணாசலம் சொல்வார்– உங்களைப்போன்ற கெட்டிக்காரரைத், தான் பார்த்ததேயில்லை என்று சொல்வார் ஸார்."

"என் கெட்டிக்காரத் தனத்தை மெச்சுவதற்கிருந்த ஒரு ஆளும் அல்பாயுசாக, அதுவும் ரயிலுக்கடியில் அகப்பட்டுக் கொண்டு, உடல் தெரியாமல் நசுக்குண்டு, இறந்திருக்க வேண்டியதேயில்லை. ம்... என்ன பண்ணுவது?" என்று பெருமூச்சுவிட்டேன் நான்.

மீனாச்சியுடன் நான் வந்தபோது பேசிய அந்த ஆண் குரலின் சொந்தக்காரன், இப்போது தன் அறைக் கதவைத் திறந்து பூட்டிக் கொண்டு, வெளியே வந்தான். "எந்த அருணாசலத்தைப் பற்றி ஸார் நீங்கள் பேசிக்கொண்டிருக்கிறீர்கள். என் அண்ணா ஒருவன் அருணாசலம் என்று இருந்தான்-தாம்பரத்தில். அவனைப் பற்றியா?" என்று கேட்டான் வந்தவன்.

## 9

அவனைப் பார்க்கும்போது அருணாசலத்தின் முகஜாடை கொஞ்சம் கொஞ்சம் இருப்பதுபோலத்தான் இப்போது தோன்றியது எனக்கு. 'அருணாசலம் என்று தனக்கு ஒரு அண்ணா-அதுவும் தாம்பரத்திலிருந்ததாக அவன் சொல்லாவிட்டால், நான் அவன் முகஜாடை அருணாசலத்தைப் போலவே இருந்ததைக் கவனித்தே இருக்க மாட்டேன். எனக்கு முகஜாடைகளைக் கவனிப்பதில் அவ்வளவாகச் சாமர்த்தியம் போதாது என்றுதான் சொல்ல வேண்டும்.

"உன் பெயர் தருமலிங்கமா?" என்று கேட்டான் மதன் உறவை இது உறுதிப்படுத்தியது.

"அப்படித்தான் அவள்கூடக் கேட்டாள்" என்று சட்டென்று அதிகம் யோசிக்காமல் பதில் அளித்தான் தருமலிங்கம். பிறகு ஏன் சொன்னோம் என்று உதட்டைக் கடித்துக் கொண்டான்.

"எவள்?" என்று கேட்டேன் நான்.

"அதுபற்றி உனக்கென்னையா ஆகவேண்டும்?" என்று சண்டைக்குத் தயாராக இருப்பவன் தோரணையிலே கேட்டான் தருமலிங்கம்.

"ஐயா! தருமலிங்க முதலியாரே! கோபம் வேண்டாம். உங்க அண்ணா முதலியாரும், உயிருடனிருந்தபோது, எனக்கு நண்பர்தான். இப்போது உன் அறையிலிருந்து வெளியேறினாளே அவள் இவருடைய அக்காள்" என்றேன் நான், படபடக்காமல், நிதானமாக.

"உயிருடனிருந்தபோது என்கிறீர்களே! இப்போது அவன் செத்துப் போய்விட்டான் என்று உங்கள் நினைப்பா?" என்று கேட்டான் தருமலிங்கம்.



"அப்படி நினைத்துத்தான் இந்தப் பையன் யாருடைய உடலையோ வைத்துக் கொளுத்திக் கருமம் எல்லாம் செய்திருக்கிறான்".

"ஏன் தம்பி? அப்படியா?" என்று ஆச்சரியத்தில் முழுகியவனாகக் கேட்டான் தருமலிங்கம்.

ஆனால், மதன் பதில் சொல்லவில்லை. அந்தத் தம்பி என்கிற வார்த்தை அவனை ஸ்தம்பிக்கச் செய்துவிட்டது.

தம்பி என்பது மிகவும் சாதாரணமான வார்த்தைதான். ஏதோ ஒரே ஒரு உறவு முறையைக் குறிக்கும் ஒரு சொல். மீனாச்சி மதனை எப்போதுமே தம்பி என்றுதான் உறவு கொண்டாடிக் கூப்பிடுவாள். 'அந்த உறவு முறையை இப்போது இவனும் கொண்டாடத் தொடங்கிவிட்டான்? முடிந்தால் அவன் வாய் வழியாக வயிற்றில் ஸோப்பைத் திணித்துத் தன்னைத் தம்பி என்று கூப்பிட்ட அந்த நாக்கை, அந்தத் தொண்டை 'ஸவுண்ட் பாக்ஸை' சுத்தப்படுத்தச் செயல்பட விரும்பினான் மதன்.

இது தெரிந்து நான் பேச்சை மாற்றினேன்; "அப்படியானால் அந்த அருணாசலம் உயிருடன் இருப்பது நிச்சயமாகத் தெரியுமா உனக்கு?" என்று கேட்டேன்.

"தெரிவதாவது, இன்று காலையில் பார்த்தேனே! இப்போது ஆறரை மணிக்கு இங்கு வருவான் அண்ணாத்தை" என்று சொல்லி விட்டு, மணிக்கூண்டுக் கடிகாரத்தைப் பார்த்தான் தருமலிங்கம். "அஞ்சு முப்பத்திரண்டுதானா ஆச்சு?" என்றான்.

நான் என் கைக்கடிகாரத்தைப் பார்த்தேன். 'என் கடிகாரம் ஆறடிக்க எட்டு நிமிஷம்' இருப்பதைக் காட்டியது; 'கடிகாரம் நின்று விட்டது, என்றேன்.

'அஞ்சடித்ததே!' என்றான் தருமலிங்கம். அவனுக்குக் கடிகாரம் மட்டுமல்ல, காலமும் அந்த ஐந்து மணிக்கே நின்றிருக்கக் கூடாதா என்றிருந்தது என்பது அவன் முகபாவத்திலிருந்து தெரிந்தது எனக்கு.

"நாகராஜன்பட்டினத்து மணிக்கூண்டு மாயமணிக்கூண்டு. காலமே ஐந்து முப்பத்திரண்டில் நின்றுவிட்டது இங்கே. இனிமேல் இன்று அஸ்தமிக்காது; இருட்டாது. நக்ஷத்திரோதயம் ஆகாது;

சந்திரோதயம் ஆகாது; பொழுது விடியாது. கடைகளைச் சாத்த மாட்டார்கள். சோப்பு வியாபாரியைக் காலையில் வரச் சொல்வார்கள் ஆனால், காலை நேரம்தான் வராது" என்றான் மதன்.

ஸோப்புக் கம்பெனியின் பிரதிநிதியிடமிருந்து இந்தக் கவிதையை நான் எதிர்பார்க்கவில்லை. ஏதோ விளையாட்டாகச் சொல்கிறார் என்றுதான் எண்ணினேன் நான், ஆனால், சூரியன் மேற்கே ஆறுமணி சமயத்தில் இருக்க வேண்டிய இடத்தில் இல்லை. ஐந்து முப்பத்திரண்டுக்கு இருக்கவேண்டிய இடத்திலேதான் இருந்தது என்று கவனிக்க, எனக்கு இது வேறு ஒரு உலகம் என்று தோன்றிற்று.

நாகராஜன்பட்டினம் எங்கேயிருக்கிறது?

அதில் ஆட்சி செலுத்தும் இந்த ஒற்றைக்கால் ராக்ஷஸன்- அதாவது இந்த மணிக்கூண்டு எப்படிக் காலத்தை அளந்து கூறு போடுகிறது?

சோப்பு வியாபாரிக்குக் காலை நேரம் வராதே! டன் கணக்காக சோப்பு விற்காமல் நின்றுவிடுமே என்று கவலை.

தருமலிங்கத்துக்கோ இந்தப் பாழும் மணிக்கூண்டு ஐந்தடித்து ஐந்து நிமிஷத்தில் நின்றிருக்கக் கூடாதா? அப்படி நின்றிருந்தால் என்றென்றைக்கும் ரதியைத் தழுவும் மதன் சிலைபோல எப்போதும் ரசித்துக் கொண்டிருக்கலாமே என்கிற எண்ணம் அவனுக்கு!

எத்தனையோ ஆண்டுகளுக்குப் பிறகு மறுபடியும் முதலி யாரை - பழைய நண்பர் முதலியாரை, என்னைவிடக் கெட்டிக்காரன் வேறு யாரும் இல்லை என்று மதனிடம் சொன்ன அந்த ஆப்த நண்பனைப் பார்க்கலாம் என்று நம்பினேன். தடைப்பட்டு நின்று விட்டால், அவன் வருவானோ மாட்டானோ? எப்படி? யார் சொல்ல முடியும்?

மாடிப்படியில் காலடிச் சப்தம் கேட்டது. வந்தது அருணாசலம் அல்ல, மீனாச்சிதான்.

## 10

நாகராஜன்பட்டினத்து மணிக்கூண்டு ஒரு கல்ப காலமாக



ஒற்றைக்காலில் நின்று தபஸ் செய்து கொண்டிருந்தது. -கல்பகாலம் என்றால் என்ன? ராணி விக்டோரியாவின் ஜூபிலி ஆண்டைக் கொண்டாடுவதற்கு எழுந்த அந்த மணிக்கூண்டு, எத்தனை காலமாக அந்த நாற்சந்தியிலே நின்று தபஸ் செய்கிறது என்று யார் சொல்ல முடியும்? ஒரு கல்ப காலம் தபஸ் செய்தது. யாரோ தெரிய வில்லை. இந்த 1958-ஆம் ஆண்டிலே ஒரு வெள்ளிக்கிழமையன்று சுபயோக சுபவேளையில் அதற்குப் பிரஸன்னமாகி அது கோரிய வரத்தைக் கொடுத்து விட்டான் பிரம்மதேவன்.

காலம் நின்றுவிட்டது.

ராக்ஷஸ சக்திகள் எப்படிப்பட்டவை என்பது அவ்வளவு சுலபமாக யாருக்கும் தெரிந்துவிடாது. நாகராஜன்பட்டினத்துக் கடிகாரம் நின்றுவிட்டால் காலம் நின்றுவிட்ட மாதிரிதான்.

திறந்த கடைகளைச் சாத்த மாட்டார்கள்.

சூரியன் மலைவாயில் விழுந்து அஸ்தமிக்கமாட்டான்.

இருட்டாது இனிமேல் மேகங்கள் வானத்திலே சிதறிக் கிடக்க, இப்போது எந்த ஒளி உண்டோ, அந்த ஒளியோடு உலகம் ஒரு கல்பகாலம் இருக்கும்.

பக்கத்துச் சினிமாக் கொட்டகையிலே ஆறு மணி ஆட்டத்துக்குத் தயாராகப் பிளேட் வைத்துவிட்டார்கள். ஒரு சினிமா நக்ஷத்திரி, 'ஹை! ஹை, என்று கண்ணுக்குத் தெரியாத ஒரு குதிரையை ஓட்டிக்கொண்டிருக்கிறாள். பிளேட் அந்த ஹை! ஹையையே திருப்பித் திருப்பிச் சொல்கிறது- கீறு விழுந்த கிராமபோன் பிளேட் போலும்! காலம் சென்றால்தானே அது அடுத்த அடிக்குப் போகலாம்! காலம் செல்லவில்லை 'ஹை! ஹை!' என்று குதிரை ஓட்டலாம். காலத்தை ஓட்ட முடியுமா?

சோப்பு வியாபாரிக்கு சோப்பு எல்லாம் என்ன ஆவது என்று கவலை! காலம் சென்றால்தானே உலகில் அழுக்குச் சேரும், அழுக்கு ஏராளமாகச் சேர்ந்தால்தானே, சோப்புக் கட்டி கொஞ்சமாவது தேவைப்படும்? இல்லாவிட்டால் அத்தனை சோப்பையும் என்ன செய்வது?

அத்தனை சோப்பும் சேர்ந்தாலும் மீனாச்சியைச் சுத்தப் படுத்தாது என்றுதான் சொல்லவேண்டும்.

ஆனால், அவள் சுத்தத்தை விரும்பவில்லை; அசுத்தத்தையே விரும்பினாள் என்பது வெளிப்படை.

இல்லாவிட்டால் அவருக்குக் காபி பலகாரம் தயார் செய்யப் போனவள், திரும்பி, தன் தம்பியின் கண் முன்னரேதான் அசுத்தமான அந்த இடத்தைத் தேடிக் கொண்டு மறுபடி அதற்குள் வருவாளா?

தருமலிங்கம் எல்லாவற்றையும் மறந்துவிட்டு அவளையே பார்த்துக்கொண்டு நின்றான். அவளுடைய பொறுப்பைக் கல்ப காலத்துக்கும் ஏற்றுக் கொண்டுவிட அவன் இந்த விநாடி தயாராக இருந்தான். இந்த விநாடியும் தாண்டிவிடாமல்தான் மணிக்கூண்டு வித்தை செய்து விட்டதே!

ஆனால், மீனாச்சி அவனைப் பார்க்காதது மாதிரியே வந்து "தம்பி!" என்றாள்.

பிரியமாகத்தான் கூப்பிட்டாள்.

தம்பியின் குரலில் அந்தப் பிரியம் எதிரொலிக்கவில்லை. "எதற்கு?" என்றான்.

"இந்த ஊர் கெட்ட பயமவன் ஊரு!" என்றாள் மீனாச்சி.

"அதுதான் தெரிகிறதே!" என்று இப்போது விற்க முடியாததாகி விட்ட தன் ஸோப்புக் கட்டிகளும், அதன் டன் கனமும் மேலேறி அமுக்குவதுபோல், திணறிக் கொண்டே பதில் அளித்தான் மதன்.

"ஏழரை மணிக்க வருவதாகப் போனாரு. இனி வர மாட்டாரு! மணி ஐந்தரைதானே ஆகும் இங்கே, இனிமேல்..." என்றாள் மீனாச்சி.

நான் எண்ணியதெல்லாம் கனவு என்கிற ஞாபகத்துடன்தான் எண்ணினேன். காலத்தைப் பற்றி எப்படி வேண்டுமானாலும் கனவு கண்டுவிடலாம். ஆனால், உண்மை நம்மை எதிர்த்து நிற்கும்போது - நமக்கே திடுக்கிடுகிறது.

காலம் இன்னும் முன்நோக்கி ஓடாதா?

சரி. பின் நோக்கியாவது ஓடுமா?

மீனாச்சி சொன்னாள்: "இந்த எழவெடுத்த ஊரிலே இந்த மணிக்கூண்டு ராக்ஷஸன் வச்சதுதான் சட்டம்!"



"கடிகாரம் மனிதன் செய்ததுதானே! மனிதன் வந்து ரிப்பேர் செய்து விடுவான்" என்றேன் நான்.

"இந்தக் கடிகாரத்தையா?" என்றாள் மீனாச்சி.

அவள் குரலிலே தொனித்த நம்பிக்கையின்மை என் ஆத்மாவை இருள்போலக் கவிந்து மூடிக்கொண்டது.

## 11

மணிக்கூண்டின் ஒற்றை முகத்தைப் பார்த்தேன் நான். 5.32 என்று அழுத்தம் திருத்தமாகக் காட்டியது. இதை நீ மீறிவிட முடியாது அப்பனே என்று கோடிட்டுக் காண்பிப்பது போலக் காண்பித்தது.

அந்த முகத்திலே கோபமோ ஆத்திரமோ, ஏளனமோ எந்தச் சலனமாவது இருந்தால், ஆறுதலாக இருக்கும். ஆனால், ஒருவிதச் சலனமும் இல்லை.

பக்கத்து வேப்ப மரத்திலே காகங்கள் கரைந்தன-இனி வராத ஒரு சூர்யாஸ்தமனத்தை எண்ணிக் கரைந்தன.

சினிமா நக்ஷத்திரி அலுப்புச் சலிப்பில்லாமல் ஹை, ஹை! என்று சொல்லிக் கொண்டிருந்தாள். அந்தப் பிளேட்டை யாராவது கை நீட்டி நிறுத்தலாம்தான்-ஆனால், அதற்குக் காலம் அனுமதி தரவேண்டுமே! காலத்தில் அல்லாமல் வேறு எதில் கையோ, காலோ! சூரியனோ, சிந்தனைகளோ, உலகமோ இயங்க முடியும்.

அரை வட்டமாக, நாகராஜன்பட்டினத்தை ஒரு அசட்டு நீலக் கலருடன், மேடும் பள்ளமுமாக, மலைகள் கண் எதிரே காவல் காத்து நின்றன. சூரிய ஒளி இரண்டு சிகரங்களுக்கிடையில் உள்ள பள்ளத்தில், தொட்டிலில் கிடக்கும் குழந்தையாகக் கிழக்கே கிடந்தது. மேலண்டைப் பக்கத்து மலைச்சிகரம் ஒன்றிலிருந்து இலவம்பஞ்சுச் சிதறலாக ஒரு மேகம் ஊசலாடிக் கொண்டிருந்தது.

மணிக்கூண்டுக்கெதிரில் இருந்த உருளை போட்ட மர மேடையிலே, வயதாகிப் பழுப்பும் புழுதியும் ஏறிய குடையின்

கீழே ஒரு போலீஸ்காரன், இடது கை தோள் மட்டத்தில் நீட்டிய படி, வலதுகை 'ஸ்டாப்' என்று சொல்லிய வட்ட வளையத்தைத் தூக்கியபடி நின்றிருந்தான். கீட்ஸ் என்கிற கவி பாடிய சித்திரம் போல அவன் என்றைக்கும் அப்படியே நிற்பான்.

தெருவிலே கார்கள் ஓடிக்கொண்டிருந்த மாதிரியும் இருந்தது. நின்றுகொண்டிருந்த மாதிரியும் இருந்தது. ஒன்றோடொன்று அவை மோதிக் கொண்டன. எனினும் 'ஆக்ஸிடெண்ட்' ஒன்றும் ஆகிவிட வில்லை. விபத்து நேருவது என்றால் கால வெள்ளம் ஓடவேண்டும்.

வாழ்வே நாகராஜன்பட்டினத்திலே ஒரு விபத்தாகி விட்டதோ?

நான் மீனாச்சியைப் பார்த்தேன்.

வாளிப்பான உடல். வயது முப்பத்திரண்டு முப்பத்தி மூணு ஆகியிருக்கும் என்றாலும், இருபது வயதுப் பெண் போலக் கட்டுத்தளராத உறுதியான அங்கங்கள், மஞ்சள் கரையிட்ட ஒரு சிவப்புப் புடவை உடுத்தியிருந்தாள். புடவையிலே இருந்த வெள்ளைப் புள்ளிகள் நம்மைப் பார்த்து; 'ஏழை ஆடவா!' என்று சொல்லிக் கண்ணைச் சிமிட்டின. அவளே விநாடிக்கு ஒரு தரம் கண்களைச் சிமிட்டிக் கொண்டுதான் இருந்தாள். அகன்று, ஆழ்ந்து, இருண்டு, உருகி ஓடக் காத்திருந்த கண்கள் அவை. மேடிட்ட நெற்றியிலே மஞ்சள் கலந்த சிவப்பாகப் பொட்டிட்டிருந்தாள். புருவத்து மயிர் அடர்ந்து சுருண்டு அடங்கிக் கிடந்தது. தலைமயிர் படிப்படியாக வளைந்து வளைந்து கடலில் காணும் அலைகளைப் போலப் பாய்ந்து பாய்ந்து ஓடிப் பிடித்தன.

மனசைக் கவரும் உருவம்தான் அவள். அதுவும் முப்பத் திரண்டு வயது எட்டும்போது பெண்களுக்கு ஒரு மாயம் ஏற்படுகிறது என்று சொல்வது மிகையாகாது. அவர்கள் கவர்ச்சி, ஒத்த வயதினரை மட்டும் அல்ல இருபது வயது நிரம்பாத காளைகளுக்கு மிகவும் கவர்ச்சிகரமாகத் தோன்றும் பருவம் அது.

மீனாச்சி இந்த வனப்புடனேயே, கவர்ச்சி உருவமாக இனி என்றென்றைக்கும் இருந்து விடுவாள்.

நாகராஜன்பட்டினத்துப் பத்தொன்பது வயது ஆடவர்களுக்கு, விழித்துக் கொள்ளும் ஆண்மைக்கு ஓயாத ஆடபத்துத்தாள்.

தருமலிங்கம்தான் அந்த ஆண்களை மீனாச்சியிடமிருந்து



காப்பாற்ற வேண்டும்.

"தம்பீ! வூட்டுக்கு வாயேன்!" என்றாள் மீனாச்சி.

ஒரு விநாடி தயங்கினான் மதன். அந்த விநாடியில் அற்புதம் நிகழ்ந்துவிட்டது. தெருவிலே கார்கள் ஓடின. விபத்துக்கள் தடுக்கப் பட்டன. போலீஸ்காரன் கைமாறி நின்றான். மலைத் தொட்டியில் கிடந்த ஒளிக் குழந்தை மறைந்துவிட்டது. சூரியன் மேற்கே மறைந்துவிட்டது. காகங்கள் அடங்கத் தொடங்கிவிட்டன. சினிமாப் பாட்டு ஹை! ஹை!யைத் தாண்டி, குதிரையையும் விரட்டிக் கொண்டு போய்விட்டது. இப்போது பக்தி பரவசமாக முருகனை "என்ன என்ன என்ன?" என்று துரத்திற்று.

நான் பெருமூச்சு விட்டேன்.

காலம் என்பதே ஒருவனின் நினைப்புத்தானே?

காலம் போகிறது என்று நினைக்கிறோம்-போகிறது. நிற்கிறது என்று நினைக்கிறோம்-நிற்கிறது.

அதுவாக என்ன செய்யமுடியும்?

கடிகாரத்தை ஓட்டிவிட்டால், கடிகாரம் ஓடுகிறது. காலண்டர் தாள்களைக் கிழித்துவிட்டால், மாதம், வருஷம், தேதி மாறுகிறது. கடிகாரமோ, காலண்டரோ என்ன செய்யும்?

காலத்தோடு ஓட முயன்று தோற்பவன் மனிதன்.

எதிர் நீச்சுப் போட்டும் பலர் காண்பித்து விடுகிறார்கள்.

ஒரு க்ஷணத்தின் இன்பத்திலே, ஒரு க்ஷணத்தின் துன்பத்திலே காலத்தை நிறுத்தியும் பலர் நமக்குக் காட்டி விடுகிறார்கள்.

ஓடுகிறவர்களோடு மற்றவர்களும் ஓடுகிறார்கள்; நிற்பவர் களுடன் நிற்கிறார்கள்.

மீனாச்சி என்றுமே 32 வயதாக இருந்துவிட முடியாது என்றுமே அவள் பதினெட்டு வயது வாலிபர்களுக்குக் கவர்ச்சியூட்டு பவளாக இருக்க முடியாது. அவளைக் காதலித்து, காமக் கிழத்தியாக்கிக் கொள்பவர்களுக்கும் வயது ஏறத்தான் ஏறும்.

நாகராஜன்பட்டினத்திலே மணிக்கூண்டு நின்று விட்டாலும்

கூடக் காலம் உண்டு; எந்த மகாராஜன் வரம் கொடுத்தாலும் பலிக்காதுதான்.

காலத்தைக் கடந்துவிடுவது அவ்வளவு எளிதான காரியம் அல்ல.

இன்னும் பலகாலம் தவம் இருக்கவேண்டியதுதான், இந்த ஒற்றைக்கால் ராக்ஷஸன். யாரும் அதற்கு ஓடாவரம் தரமுடியாது. மனிதன் வந்து கடிகாரத்தை ரிப்பேர் செய்து சரியான டைம் என்று வைத்துவிட்டுப் போய்விடுவான்.

மீனாச்சி மூன்றாவது புருஷனாக ஒருவனைத் தேடி அவனையும் கல்யாணம் செய்துகொண்டு சாதாரண வாழ்வு வாழ முயன்ற மாதிரி; அந்தக் கடிகாரமும் சாதாரணமான-வாழ்வு நாளுக்கு இரண்டு சுற்று, இருபத்திநாலு மணிநேரம், மணிக்கு அறுபது நிமிஷம், நிமிஷத்துக்கு அறுபது விநாடிகள் என்று ஓடித்தான் ஆகவேண்டும்.

தப்ப முடியாது!

ராக்ஷஸர்களும் தேவர்களும் இந்தச் சாதாரணத்தைத் தப்ப முயன்றார்கள். மனிதன் தப்ப முயலுவதேயில்லை.

எருமை மாடு சாணியையும் போட்டு அதன் மேலேயே படுத்துவிடுகிற மாதிரி, மனிதன் காலத்தையும் காலத்தின் ஓட்டத்தையும், கடிகாரத்தையும், காலண்டரையும் சிருஷ்டித்து விட்டு, தப்பமுடியாது என்று அதற்குள்ளேயே வளைய வருகிறான்.

## 13

'வா தம்பி!!' என்று பிரியமாகத்தான் கூப்பிட்டாள் மீனாச்சி. தருமலிங்கம் இருப்பதை அவள் கண்டதாகவே காட்டிக் கொள்ள வில்லை. அவன் யாரோ?

தனியாக இருக்கும்போது உறவு தனி. இப்போது தம்பிதான் உறவும் அவளுக்கு. வீட்டிலே காபி பலகாரம் சாப்பிட ஏழரை மணிக்கு வரப்போகிறானே, அந்தக் கணவன்தான் உறவு. அப்படி ஒருநாள் உறவாக ஒப்புக்கொண்டிருந்தவன்தான் அருணாசல முதலியாரும், இப்போது அவனை மறந்திருப்பாள்.



இல்லை, ஞாபகம் இருக்கும். செத்தவனை அவள் சாகவில்லை என்று சொன்னாளாமே!

ஆனால் முதலியார் செத்தவன்தானா?

என் கேள்வியை உணர்ந்தவன் போலப் பார்ப்பதை நிறுத்தி விட்டு, என் பக்கம் திரும்பி; "ஆறரையாறதுங்களா மணி? ஆறரைக்கு வருவதாக இல்லே அருணாசலம் சொன்னது?" என்றான் தருமலிங்கம்.

நான் மணிக்கூண்டைப் பார்த்தேன். அது 5,32 தான் காட்டிற்று. என் கைக்கடிகாரத்தைப் பார்த்தேன். மணி ஆறு பத்து.

"எந்த அருணாசலம்?" என்றாள் மீனாச்சி.

யாரும் அவளுக்கு உடனே பதில் சொல்லவில்லை.

சினிமாக் கொட்டகையிலே சந்தடியடங்கிவிட்டது. கதவைச் சாத்திக்கொண்டு, இருட்டு உலகத்திலே, பொய்யானதோர் படத்தை, பொய்யை மட்டும் விரும்பிக் காசு கொடுத்து வந்திருந்த ஜனங்களுக்குக் காட்டத் தொடங்கிவிட்டார்கள்.

பொய்யை விரும்பாதவர்கள், விரும்பி ஏற்காதவர்கள் யார்?

கதை என்று படிப்பதும், கவிதை என்று கதைப்பதும் சினிமா என்று பார்ப்பதும், சிலை என்று உருவமாக்குவதும் எல்லாமே பொய்யை நாடித்தானே! இல்லாத ஒன்றை எண்ணி அங்கீகரிப்பது மனிதனின் தப்பமுடியாத சுபாவம்!

ஒரு உண்மையைத் தப்புவதற்கு ஒன்பது பொய்களைச் சிருஷ்டித்துக் கொள்ள மனிதன் தயாராகவே இருந்து வந்திருக்கிறான்.

ஆனால், உண்மையைப் போற்றுவதாகத்தான் ஐதீகம், மரபு, பேச்சு எல்லாம்.

மனப்பாயசம் குடித்து நாக்கை நொட்டை விடுபவன்தான் மனிதன்.

செத்துப் போய்விட்டதாக நம்பப்பட்ட, மதனால் கருமங்கள் செய்து அஸ்தியாக நீரில் கரைக்கப்பட்ட அருணாசலம், மீண்டும்

உயிர் பெற்று வந்தால், வந்து மீனாச்சியைத் திடுதிப்பென்று சந்தித்தால், என்ன ஆகும்?

ஒன்றும் ஆகாது என்றுதான் எனக்குத் தோன்றியது.

அவளுக்குத் தருமலிங்கத்துடன் அரை மணி நேரம் இருக்க வேண்டும் என்கிற எண்ணம் வந்ததே, அவன் அவளுக்குத் தன் பழைய காதலனை ஞாபகமூட்டினான் என்பதனால்தானோ? இருக்கலாம். தருமலிங்கத்தைப் பார்க்கப் பார்க்க, அவன் அருணாசல முதலியாரைப் போலவே இருப்பதாகத்தான் தோன்றியது எனக்கு.

"எந்த அருணாசலம்?" என்று மீண்டும் கேட்டாள் மீனாச்சி.

"என் அண்ணன்" என்றான் தருமலிங்கம்.

"உன் அண்ணனா?" என்று அலக்ஷியமாகச் சொன்னாள் மீனாச்சி.

சொல்லாமலே ஒரு விஷயத்தை எடுப்பாகச் சொல்லி விடுவதில் பெண்களுக்குள்ள சாமர்த்தியம் வேறு யாருக்கு வரும்? அந்த 'உன்' என்கிற வார்த்தையிலே விழுந்த அழுத்தம், தருமலிங்கத்தை நீ யார் என்று கேட்கிற தோரணையில் விழுந்தது.

ஆண் மகனுக்குக் கோபம் வராதா? சற்றுமுன் நெருங்கி நின்ற அந்தக் கவர்ச்சிகரமான உருவம், இப்படி ஒதுங்க முயன்றால், மறுபடியும் உன் பிடியில் சிக்கமாட்டேன் என்று சவால் விடுகிற மாதிரி சொன்னால், பேசாதிருப்பானா!

தருமலிங்கத்தின் முகம் சிவந்தது. அவன், தொண்டையில் ஆத்திரமான வார்த்தைகள் சிக்கி, அவன் முகத்தைச் சிவக்க அடித்தன.

இதைக் கவனித்த நான் பேச்சைத் திருப்புவது நல்லது என்கிற நல்லெண்ணத்துடன் மதனிடம் "இவ்வளவு பிரியமாகக் கூப்பிடுகிறாள்-போய்ட்டு வாயேன் மதன்!" என்றேன்.

கோபமாகத் திரும்பி என்னைப் பார்த்தான் மதன், பிறகு, "நீங்கள் உங்கள் வேலையைப் பாருங்கள் ஸார்" என்றான்.

"பார்க்கிறேன் அப்பா மதன்" என்றேன் நான் பணிவாக.



தன் அக்காள் இன்னமும் விபசாரி என்று அறிந்த கோபம் அவனுக்கு. ஆனால் ஒருதரம் அப்படியிருந்தாள். இப்போது எப்படியிருந்தால் என்ன? இது புது விஷயம் அல்லவே என்கிற நினைப்பு எனக்கு. ஆனால் மதன் அப்படி நினைக்கவில்லை என்று தோன்றியது.

இதற்குக் காரணம் என்ன?

தன் சகோதரியைப் பற்றி அந்த நாட்களில் அவனுக்கே தெரியாதா என்ன? தெரியாமல் இருந்திருக்க முடியாது.

இப்போது அவனே கல்யாணம் செய்துகொண்டு குடியும் குடித்தனமுமாக இருப்பதனால், இப்படித் தன் அக்காள் இருப்பது குறித்துக் கோபம் வந்ததா அவனுக்கு? இருக்கலாம்.

இரண்டு விதமாகவும் இருக்கலாம். இப்போது அவனே சொன்னபடி அவன் அக்காளே குடும்ப ஸ்திரீதான். அந்தக் குடும்ப ஸ்திரீ இப்படி இருப்பதைப் பார்த்து, தன்னை மணந்து கொண்ட குடும்ப ஸ்திரீயும் இப்படித்தான் இருப்பாளோ என்று பயம் தோன்றலாம் அவனுக்கு. அதற்கு மாறாக, பயம் என்கிற நிலைகடந்து, அவள் இப்படித்தான் என்கிற நிச்சயம் ஏற்பட்டிருந் தாலும் சோப்பு வியாபாரிக்குக் கோபம் வருவது நியாயமே!

நான் சிரித்துக்கொண்டு பேசாமலிருந்தேன்.

"என் தம்பி சில சமயம் இப்படித்தான்" என்றாள் மீனாச்சி.

"உன் தம்பியையும் உன்னையும் எனக்கு வெகுநாட்களாகவே தெரியும்!" என்றேன்.

மாடிப்படியில் காலடிச் சப்தம் கேட்டது. உறுதியான ஆண் பிள்ளையின் தட்தட் அடிச் சப்தம்.

மூவரும் நிமிர்ந்து திரும்பிப் பார்த்தோம்.

## 14

எரிமலையின் அடிவாரத்தில் வசிப்பவன் எப்போதுமே எரிமலையைப் பற்றிய சிந்தனைகளில் ஈடுபட்டிருந்து விடுவ

தில்லை. அதை மறந்து விடவும் அவனுக்குச் சக்தியிருக்கிறது; மறந்துவிட்டு மற்றக் காரியங்களைக் கவனிக்கிறான்.

எரிமலையை மறந்துவிட்டு-அதிகமாக மறந்துவிட்டு என்று சொல்லலாமா-அவன் இருக்கும் நேரத்திலே, எரிமலை தன்னை அவனுக்கு ஞாபகப்படுத்தத் தொடங்கிவிடும் என்றும் சொல்லலாம். புகையைக் கக்கும். ஓடிப் போய்விட முயலுவான் மனிதன். பாதி வழி ஓடவிட்டு விட்டு, அவன்மேல் எரிதணலையும் நெருப்புக் குழம்பையும் வருஷிக்கும் எரிமலை.

இதைக் கேட்பவர்கள் முகத்திலே அவநம்பிக்கை தெரிகிறது.

உனக்கெப்படி இது தெரியும்? நீ எரிமலையையே பார்த்த தில்லையே என்று கேட்கலாம்.

உண்மைதான். ஆனால், உண்மையும் அன்று அது!

யார் எந்த 'நிமிஷத்தில்' எரிமலையின் அடிவாரத்தில் இல்லை என்று நிச்சயமாகச் சொல்லமுடியும்?

பூகோளப் பாடப் புஸ்தகங்கள் சொல்லுகின்றனவே அவை மட்டும்தானா எரிமலைகள்?

வேறு எரிமலைகள் இல்லையா?

மீனாச்சி என்கிற பெண் சக்தி எரிமலையல்லவா?

அதற்குப் பதில் தருகிற, தருமலிங்கம், அருணாசலம் மற்றும் ஊர் பெயர் இன்னும் தெரியாத, முகமற்ற அவள் கணவன் என்னும் ஒரு புல்லோ, கல்லோ, அந்த ஆண் சக்தியும் ஒரு எரிமலைதான்.

குறுகலான ஹோட்டல் மர மாடிப்படிகளிலே ஏறி வந்த அந்தக் காலடிச் சப்தம் எனக்கு ஏனோ ஒரு எரிமலையின் உறுமலை ஞாபகப்படுத்தியது.

ஆவி உலகத்துடன் பேசுவது-உள் உணர்க்கை ஒன்று இருக்க வேண்டும் என்கிறார்கள். அதுபோல அது வரப் போகிறது என்றும், என்ன வரப்போகிறது என்றும் தெரிந்து கொள்வதற்கு ஒரு உணர்க்கை தேவைதான் போலும்! என்னைப் பற்றிய வரையில் வரப்போவதைப் பற்றி எனக்கு இந்த உணர்க்கை கிடையாது. பிறரைப் பற்றிய வரை உண்டு என்றுதான் எண்ணுகிறேன்.



மாடிப் படியில் காலடிகளின் சப்தம் நெருங்க நெருங்க நான் மாடிப் படியைக் கவனிப்பதை விட்டுவிட்டு மீனாச்சியின் முகத்தையேப் பார்த்துக் கொண்டிருந்தேன். என் முகத்தில் என்னத்தைக் கண்டானோ மதன்-அவன் என் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தான்.

தெருவிலே ஒரு மோட்டார் ஹார்ன் எருமை மாட்டுத் தொண்டையில் அலறியது. மேல் நாடுகளில் எருமைகள் கிடையாது - எருமைத் தொண்டைகள் (அதாவது மோட்டார் ஹார்ன்கள்) தான் உண்டு என்ற எண்ணம் தோன்றிற்று எனக்கு.

காலமும், தேசவர்த்தமானமும் மனிதன் தானாகச் சிருஷ்டித்துக் கொண்டவைதான். அவற்றை மீறி அவன் செயல்பட முடிவ தில்லை. மேலை நாடுகளைப் பின்பற்றி, இப்போது கிழக்கு, மேற்காகியே விட்டது-அல்லது மேற்காகிக் கொண்டிருக்கிறது. ஆனால், அங்கே ஹாலிவுட்டில், முன்னொரு காலத்தில் ஹிமய மலைச்சாரலில் ரிஷிகள் யோகம் செய்தது மாதிரி மேல் நாட்டவர்கள் யோகம் கற்றுக் கொண்டிருக்கிறார்கள்.

மீனாச்சிகள் அங்கும் உண்டு; இங்கும் உண்டுதான்.

ரிஷிகளை ரிஷிகளாக்குவதற்காகவோ, அல்லது ரிஷிகளாகாமல் இருக்கும்படி தடுப்பதற்காகவோ, வந்தவர்கள்தான் மீனாச்சிகள் என்று ஒரு பார்வையுடன் அவர்களைப் பார்க்கலாம்.

அல்லது அழியாத ஒரு ஆசையுடன்-விடாயுடன் பார்க்கலாம். அவர்களைத் தருமலிங்கம் பார்த்தமாதிரி.

என்னைப் போலக் கதைக்கென்று ஏற்பட்ட ஜடப் பொருளாகவும் அவளைப் பார்க்கலாம்.

அல்லது மதனைப்போல வெறுப்புக்குரிய, தன்னைப் பொய்யனாக்கி, தன் மனைவியைப் போன்ற ஒரு பலஹீனமான அனுதாபத்துக்குரிய ஆனால், அனுதாபம் பெறாத பெண் என்று எண்ணலாம்.

எது சரி என்று சொல்வது?

அவரவர்களுக்கு அவரவர் பார்வை சரிதான்.

நான் மீனாச்சியையே பார்த்துக் கொண்டு நின்றேன். மாடிப்படி ஏறி, அவ்வளவு அமுத்தலாக, எரிமலை வெடிக்கும் தருவாயில் இருப்பது போல வந்தவன் யார்?

அவள் முகம் பளிங்குபோலக் காட்டியது. அதில் சந்தேகத்துக் கிடமேயில்லை.

இங்கு நாகராஜன்பட்டினத்தில் அவளுக்குக் கணவனாக இருப்பவன் அவன்.

அகலிகை அன்று கௌதமன் சாபத்துக்குட்பட்டுக் கல்லானது இப்படித்தானோ என்று ஐயுறும்படியாக, மீனாச்சியின் உருவம் நிமிர்ந்து நிலைத்தது; சிலைபோல வலுப்பெற்றது; முகபாவம் திடப்பட்டது. கண்கள் மின்னின. ஆனால், வழக்கம்போலச் சிமிட்டவில்லை.

ஒரே நிமிஷந்தான்.

## 16

"வரயா தம்பி, வூட்டுக்கு. அவருகூட வந்திட்டாரு" என்றாள் மீனாச்சி. வந்த கணவன் எதுவும் சொல்லுமுன் நிலைமையைத் தெளிவாக்கித் தப்பிவிட வேண்டும் என்று அவளுக்கு அவ்வளவு முன் யோசனை.

ஏதோ சொல்ல வந்த அவள் புருஷன், ஒரு நிமிஷம் இந்தத் திடீர்த் தாக்குதல் முன் திணறினான். நான் அவனைத் திரும்பிப் பார்த்தேன். நறுக்கு மீசையும், வெளுத்த பல்லும், கறுத்த தலைக் கிராப்புமாக, சிவந்த கண்களுடன், ஈரமில்லாத உதட்டுடன் காட்சியளித்தான் அவன். கையிலே பாலாவையோ ஈட்டியையோ கொடுத்துக் கோயிலில் கொண்டுபோய் நிறுத்திவிட்டால், தானாகவே மதியத்துக்கு, இந்த உயிருள்ள தெய்வத்துக்குக் கிராமத்து ஜனங்கள் ஆட்டுப் பலி தர ஆரம்பித்து விடுவார்கள்.

இவனையா விரும்பிக் கல்யாணம் செய்து கொண்டாள் மீனாச்சி?

அருணாசலம் எப்படி இருப்பான் என்று மனசிற்குள் நினைத்து உருவம் தீட்டிப் பார்த்தேன் நான். அவன் பட்டணத்து நாகரிக



புருஷன். நடப்புத்தான் கில்லாடி போல நடப்பானே தவிர, உருவத்திலோ, அங்க அடையாளங்களிலிருந்தோ, அவனைத் தனியாக வேறுபடுத்தி, நாகரிகமானவர்களிடையே நாகரிகமற்றவன் என்று சொல்லிவிட முடியாது.

"தெரியவில்லையா என்னை?" என்று மதன் குறுக்கிட்டான். எவ்வளவுதான் அக்காளிடம் கோபமானாலும் அவளைக் காப்பாற்றித் தரவேண்டியதும் அவன் பொறுப்புத்தானே! "மதன், சோப் ஏஜெண்டு" என்று பெயர். தொழில் எல்லாம் தெரியச் சொன்னான் மதன கோபால்.

அப்போதுதான் மீனாச்சியின் புருஷன் அவனைப் பார்த்தான். "உம், எப்போ வந்தே நீ?" என்று விசாரித்தான்.

"ஐந்து முப்பத்திரண்டுக்கு" என்ற மதன், மணிக்கூண்டுக் கடிகாரத்தைப் பார்த்துக்கொண்டே, "இந்த ஐயாவை எனக்குத் தாம்பரத்திலிருந்தபோது தெரியும். அக்காளுக்குக் கூடத் தெரியும்" என்றான்.

"ஓஹோ! தெரியுமா?" என்றான் புருஷன்.

மதன் இப்போதுதான் தன் சகோதரியின் அழைப்புக்குப் பதில் சொன்னான். "நீ அவருடன் போ அக்கா. நான் உடுப்பை யெல்லாம் கழட்டிப் போட்டுவிட்டு, அரைமணி, ஸாருடன் பேசிக் கொண்டிருந்துவிட்டு வருகிறேன். நீ போ" என்றான்.

"சாப்பிட வந்துவிடு" என்று சொல்லிவிட்டு, மீனாச்சி திரும்பித் தன் புருஷனை நிமிர்ந்து பார்க்காமல் படியிறங்கினாள்.

அவளைப் பின் தொடர்ந்து போகுமுன் அவள் புருஷன் "இவரு யாரு? இவரும் தெரிஞ்சவருதானே" என்று தருமலிங்கத்தைக் காட்டிக் கேட்டான்.

மதன் என்ன பதில் சொல்வது என்று தயங்கினான். அதற்குள் தருமலிங்கமே, "நான் என் அண்ணாருக்காகக் காத்திருக்கேன்" என்றான்.

"நான் இல்லையா உன் அண்ணாரு!" என்று சொல்லிக் கொண்டே, வாய்விட்டு குழந்தை மாதிரி கலகலவென்று சிரித்துக் கொண்டு மீனாச்சியைப் பின் தொடர்ந்து படியிறங்கிப் போனான் அவள் புருஷன்.

"அதுதான் தெரிகிறதே!" என்று அவனுக்குப் பதில் சொல்கிற மாதிரி சொல்லிவிட்டுச் சிரித்தேன். "ஆனால், உனக்கும் அவனுக்கும் உறவு உண்டு இல்லையா-தர்மலிங்கம்? அது என்ன உறவு?" என்றேன்.

"மீனாச்சியைத்தான் கேட்கவேண்டும்" என்றான் மதன், தன் கோபத்தை விட்டுச் சிரித்துக் கொண்டே.

"மீனாச்சிக்கு உறவுமுறை கிளர்ந்து சொல்லத் தெரியாது. உறவு முறைகள் ஏற்படுத்தத்தான் தெரியும்" என்றேன் நான்.

'அதோ அண்ணாவும் வந்துட்டாரு. நான் போகிறேன்' என்று நாற்சந்தியில் கும்பலில் கையைக் காட்டினான் தருமலிங்கம். மர மாடிப் படியில் தடதடவென்று இறங்கி ஓடினான்.

அவன் கை நீட்டிக் காட்டிய பக்கம் திரும்பிப் பார்த்தேன். தெருவிளக்குகள் பளிச்சென்றுதான் எரிந்தன. கும்பலும் அதிகம் என்று சொல்லமுடியாது. ஒவ்வொருவர் முகமும் நன்றாகவே தெரிந்தது. நான் தேடித் தேடிப் பார்த்தேன். எனக்குத் தெரிந்த முகம், அருணாசலத்தின் முகம், தெரியவில்லை.

## 16

ஆனால், எனக்கு யாருடைய முகமுமே அவ்வளவாகத் தெளிவாக, ஞாபகத்தில் இருப்பதில்லை என்றுதான் சொல்ல வேண்டும். அருணாசலம் எப்படியிருப்பான் என்று என் மனசில் உருவமும் இல்லை. ரயிலடியில் நசுக்குண்டவன், இறந்து விட்டான், செத்தும் பிழைத்திருப்பவன், எப்படியிருப்பான்?

நான் மதனைப் பார்த்தேன்.

மதன் கண்ணிலும் அருணாசலம் பட்டதாகத் தெரியவில்லை.

"அருணாசலம் செத்துவிட்டான். காரியம் நான் தானே பண்ணினேன்?" என்றான் மதன்.

"இருந்தாலும் முதலியார் உயிருடன்தான் இருக்கிறான் என்று சொல்லுகிறாள் என்றாயே!" என்றேன்.

"அது பலவும் சொல்லும்."



உண்மையைக் காண, நேருக்கு நேர் காண மதனும் அறிந்து கொண்டு விட்டான் என்பது தெளிவாகிவிட்டது.

பலவும் சொல்லலாம். சொல்லுவது எல்லாமே உண்மைதான் என்பதுதானே விசேஷமான தத்துவம்?

பொய் என்பதற்கு வியாக்கியானம் என்ன? இல்லாதது தான் பொய். இல்லாதது எப்படி இருக்க முடியும்? ஆகவே, பொய் என்று நானே எண்ணிச் சொன்னாலும், அது சொன்ன மாத்திரத்திலே நிஜமாகிவிடுகிறது என்பதுதான் சத்தியம்.

உலகம் மாயை. ஆனால், உலகமும் உண்டு என்று சொல்கிற வேதாந்தி, இதைத்தானே சொல்லுகிறான்?

மீனாச்சியைக் கற்புக்கரசி என்று சொன்னால் கற்புக்கரசிதான்.

விபசாரி என்று சொன்னால் அவள் விபசாரிதான்.

இரண்டும் அல்ல என்றால், இரண்டும் அல்லதான்.

இந்த மணிக்கூண்டுக் கடிகாரம் இப்போது நின்றுவிட்டதே தவிர, எப்போதும் ஒற்றைக் காலால் நடந்து காலத்துடன் ஓடிக் கொண்டிருந்ததுதானே அது.

அது நின்றுவிட்டதற்காக உலகம் நின்று விடுகிறதா? காலம் நின்று விடுகிறதா?

ஆனால், அது நின்று விட்டால் நின்று விடுகிற உலகத்தையும் காலத்தையும் நாம் கற்பனை செய்யமுடியும்-அதுபற்றி நாம் கனவு காணமுடியும். அந்தக் கற்பனையும் கனவும்தான் உண்மை என்று சொன்னால், யார் வேண்டாம் என்பார்கள்?

வேண்டாம் என்றாலும் விடுமோ? சொன்ன மாத்திரத்தில் தான் அது உண்மையாகிவிட்டதே!

மன்மதன் ஒருவனுக்குத்தான் இத்தனை நாட்களும் எரிந்த காட்சி, எரியாத கட்சி உண்டு. இப்போது மனிதன் ஒருவனுக்கும் அது கிட்டிவிட்டது. பெரும் பேறுதானே அது!

அருணாசலம் இறந்து விட்டானா? இருக்கிறானா? அது இன்னும் நிச்சயமாகவில்லை.

நிச்சயம் செய்துதான் ஆக வேண்டும் என்று மதனுக்கு ஒரு அவசியமும் தோன்றவில்லை போலும். சட்டையைக் கழட்டிப் போட்டுவிட்டு, முகம் கழுவிக்கொண்டு அக்காள் வீட்டுக்குப் போய் வருகிறேன் என்று கிளம்பினான்.

"இவ்வளவுக்கும் பிறகு போகாதிருந்தால் நன்றாக இராது."

"எவ்வளவுக்கும் பிறகு?" என்று என்னைப் பழைய கோபத்துடன் திரும்பிப் பார்த்தான் மதன்.

"இரவுச் சாப்பாட்டைக் கோபமாகச் சாப்பிட்டால் உடம்புக்கு ஆகாது" என்றேன் நான் எகத்தாளமாக.

"இப்படியெல்லாம் அசந்தர்ப்பமாக ஏதாவது பேசுவீர்கள் என்று அருணாசலம் சொல்லுவான்" என்றான் மதன்.

"முதலியாரா அப்படிச் சொன்னான்? என் நண்பன் என்று நான் நினைத்துக் கொண்டிருந்த அவனா, அப்படிச் சொன்னது?" **என்**றேன்.

அவன் என் நண்பனல்ல என்பது மீண்டும் ஞாபகம் வந்தது. அருணாசலமா, என் நண்பனா? ஐந்துரூபாய் ஒருதரம் கடன் வாங்கிக்கொண்டு போனவன், போனவன்தான். அதற்கப்புறம் நான் அவனைப் பார்த்ததேயில்லையே!

மதன் பதிலே சொல்லாமல் தன் அறைக்குள் போனான்.

## 17

மாடிப்படியில் சாய்ந்துகொண்டு, கீழே போகிறவர்கள் வருகிறவர்களைப் பார்த்துக்கொண்டு தனியாக வராண்டாவில் நின்றேன்.

குறுகலான, அதிக உயரமான கட்டிடம் அது. மாடி வராண்டாப் படிகள் கப்பல் தளத்திலிருக்குமே அந்தக் கைப்பிடிகளை ஞாபகமூட்டின. நான் கப்பல் பிரயாணம் செய்த தில்லையே என்று இனி வருந்த வேண்டியதில்லை.

ஹோட்டல் நிலைத்து நிற்கிறது, தெருவிலுள்ள மனிதர்கள் தான் நடந்து ரெகண்டிருக்கிறார்கள் என்று நான் எண்ணுகிறேன்.



அது உண்மையா? ஹோட்டல்தான் போய்க் கொண்டிருக் கிறது. இந்த மனிதர்களும் நாகராஜன்பட்டினமும் நகர்ந்து கொண்டிருக்கின்றன என்று சொல்வது உண்மையா?

எது உண்மையானால் என்ன? ஏதோ நகர்ந்து கொண்டிருக் கிறது. எங்கே, எதற்காக, எந்தத் திசையில் நகர்ந்து கொண்டிருக் கிறது?

அருணாசலம் ரயிலுக்கடியில் நகர்ந்து, யமலோகம் போய் விட்டான்.

ஆனால், அவன் போய்விட்டான் என்று திடமாக யாரும் சொல்லமுடியாது. அருணாசலம் யமனைக்கூட ஏமாற்றிவிட்டு, சித்திரக்குப்தனுக்கும் டிமிக்கி கொடுத்துவிட்டு, மீனாச்சியையும் மீனாச்சி போன்ற பெண்களையும் தேடிக்கொண்டு மறுபடி பூமிக்கு வந்துவிடக் கூடியவன்தான். அவனால் முடியாது இது என்று நினைப்பதற்கில்லை.

தருமலிங்கமாக வந்ததே அவன்தானோ? இல்லை என்று சொல்லலாகுமோ?

மணிக்கூண்டுக் கடிகாரம். ஐந்து முப்பத்திரண்டில் நிற்கிறது. அதுவாவது நிற்கிறதே! மனிதர்கள்தான் ஓடிக்கொண்டேயிருக்கிறார் கள். கடிகாரமாவது காலார நிற்கட்டுமே!

மீனாச்சி கணவனைத் தேடி அடைந்துவிட்டாள். இருவரும் ஒரு பாதையில் மனம் ஒப்பி-அதாவது, எவ்வளவு தூரம் மீனாச்சி போன்றவர்களும் அவள் புருஷன் போன்றவர்களும் மனமொப்ப முடியுமோ அவ்வளவுக்கு மனம் ஒப்பிப் போய்க் கொண்டிருந்தார்கள்.

மதன் சட்டையை மாட்டிக்கொண்டு, வேட்டி கட்டிக்கொண்டு, முகம் கழுவிப் பவுடர் போட்டுக் கொண்டு, கிராப்பைப் படிய வாரி விட்டுக்கொண்டு வந்தான்.

கீழே போகிற ஜனக்கூட்டத்தைப் பார்த்துக்கொண்டு, அவனும் சற்றுநேரம் நின்றான்.

"உங்களுக்கு ஒரு சோப்புக் கட்டி, உயர்ந்த விலை, வாசனை யுடையது தருகிறேன்" என்றான்.

வாங்கிக் கொண்டேன்.

"வரட்டுமா?" என்று கிளம்பினான்.

நான் பதில் சொல்லவில்லை.

எனக்கு அவன் சோப்புக் கட்டி கொடுத்ததற்கு என்ன அர்த்தம்? எனக்கும் அவ்வளவாகச் சுத்தம் போதாது என்றுதான் அர்த்தமா?

●

*1961*